உ சிவமயம்

சென்னைப் பதிவு எண் ௧௫௦௪. | தந்திவிலாசம்:—"Ooliar"

# தனவைசிய ஊழியன்

செவ்வாய்க்கிழமை தோறும் வெளி வருவது.

ஆசிரியன்:—ராய. சொக்கலிங்கன்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

வாழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௫ காரைக்குடி குரோதன ஸு சித்திரை மீ ௨௩-ௗ (௫—௫—௧௯௨௫) இதழ் [illegible]

(ஆசிரியர் தரகநாத் தாஸ்.)

அமெரிக்கநாட்டில் "நியூயார்க் ஈவனிங் போஸ்ட்" என்றோர் சமாசாரப் பத்திரிகை வெளியிடப்படுகின்றது. இவ்வாண்டு—ஜனவரி மாதம் ௨௨-ந்தேதி, அப்பத்திரிகையில் ஆங்கிலேயர்களை இழிவுபடுத்திக்கூறி ஓர் தலையங்கம் வரையப்பட்டிருந்தது. அத்தலையங்கத்தில் கீழ்க்காணப்படும் அம்சங்களை இந்திய அரசியல்வாதிகள் அனைவரும் கவனமாகப் படித்தல் அவசியமாகும்:—

"ஜெனீவா ஒப்பந்தத்தைப் பற்றி யோசித்து அதனை அங்கீகரிக்கும் பொருட்டு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியசபையின் கூட்டம் நடைபெறாது என உத்தியோக முறையில் அறிவிக்கப்பட்டு விட்டது. ஏகாதிபத்திய சம்பந்தமான முக்கிய விஷயங்களைப்பற்றி இங்கிலாந்து அரசாங்கத்துடன் கூடியோசிக்க பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் மறுத்தது பிரிட்டிஷ் அரசியல் சரித்திரத்தில் இதுவே முதல் தடவையாகும்."

இச்சம்பவம், பிரிட்டிஷ் குடியேற்றநாடுகள் அனைத்தையும் இதுவரை ஒன்றாகப் பிணைத்துக்கொண்டிருந்தபந்தத்தைத்தளர்வுறச்செய்த சம்பவங்களுள் கடைசியானதாகும். இதுகாலை குடியேற்ற நாடுகள் இங்கிலாந்தை ஐரோப்பிய வல்லரசுகளுள் ஒன்றெனக்கருதியிருக்கின்றனவேயன்றி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குத் தலைமையான நாடு என்று கருதவில்லை. இனி தங்கள்நாடுகளின் வருங்கால நிலையைத் தாமே நிர்ணயித்துக் கொள்ளப்போவதாக உள்ள அறிகுறிகளை இக்குடியேற்ற நாடுகள் சூசிப்பித்து விட்டன.

இவ்வாறாக அந்நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாட்டரசாங்கம் உலக அரசியல் விஷயங்களில் தலைமை வகித்து நடத்த வேண்டுமென்று விரும்புகின்றன. இக்கொள்கை நாளுக்குநாள் பரவி வருகின்றது. அமெரிக்க ஐக்கியநாட்டரசாங்கத்தார் ஆலோசனைக்குக்கொண்டு வரும் எவ்விஷயத்திற்கும் இக்குடியேற்ற நாடுகள் மாறான அபிப்பிராயங்கொடுக்குமென நம்புவதற்கில்லை.

## பிரிட்டிஷ் உலக அரசியலும் இந்தியாவும்.

ஜெனீவா ஒப்பந்தம் சம்பந்தப்பட்டமட்டில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் தீர்மானமே முடிவானதென்று எண்ணிவிடக்கூடாது. ஆனால் அவைகளுள் ஏதாவதொரு நாடு அவ்வொப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள மறுக்குமானால் லண்டன் அரசாங்கமும் மறுக்கவேண்டிவேதுதான். லண்டன் அரசாங்கமும் அவ்வாறே செய்யுமாயின் சர்வதேச சங்கம் அவ்வொப்பந்த சம்பந்தமாக மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாது.

யுத்த தளவாடங்களைக் குறைக்கும் பொருட்டும், இனி யுத்தங்கள் நடைபெறாதிருக்கும் பொருட்டும் செய்யப்படும் ஏற்பாடுகளை (ஜெனீவா ஒப்பந்தம்) நிராகரித்து விடுவதோடு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பொறுப்பு முடிந்துவிடாது. பிரான்ஸ் தேசத்திற்கு இனி அபாயம் நேராதவாறு பாதுகாக்கப்படும் என்று பிரிட்டிஷ் பிரதமமந்திரியாயிருந்த திரு ராம்ஸே மாக்டனல்டு உறுதி கூறியிருக்கிறார். அவ்வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டுமென்பதே பிரஸ்தாப ஜெனீவா ஒப்பந்தத்தின் முக்கியநோக்கம். இவ்வாக்குறுதி இன்னும் பூர்த்தி செய்யப்படவில்லை. லண்டன் அரசாங்கமும் பிரஞ்சு அரசாங்கமும் ஒன்றுபட்டு ஒப்பந்தஞ் செய்துகொள்ளுவதில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளுக்கு சம்மதந்தான்: ஆனால் அவ்வொப்பந்தத்தில், தாங்களும் கட்டுப்பட்டிருக்க அவைகளுக்கு விருப்பமில்லை.

இவ்விஷயத்தில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் அமெரிக்க ஐக்கியநாட்டரசாங்கத்தார் கொண்டுள்ள அபிப்பிராயத்தையே கொண்டுள்ளன என்றே சொல்ல வேண்டும். அந்நாடுகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்த நாடுகளாகவும் சர்வதேச சங்கத்தில் ஸ்தானம் பெற்றுள்ள நாடுகளாகவும் இருந்தபோதிலும், ஐரோப்

"...பிய நாடுகளுள் தற்பொழுது ஏற்படும் ஒப்பந்தங்களும் பிறவும் வருங்காலத்தில் மிகுந்த அபாயங்களுக்கு ஆஸ்பதமாகலாமென்ற அபிப்பிராயம் கொண்டிருக்கின்றன"

* * *

சுருங்கக் கூறுமிடத்து, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைச்சேர்ந்தசுயஆட்சிபெற்றுள்ள குடியேற்ற நாடுகள் ஆங்கில அரசாங்கத்தார் தீர்மானிப்பவைகளை யெல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டு நடப்பதில்லை யென்றும், தங்களது இஷ்டப்படியேதான் அரசியல் விஷயங்களில் நடந்து கொள்ளுகின்றனவென்றும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அந்நிய நாட்டுக்கொள்கை சம்பந்தப்பட்டமட்டில் தங்களது அபிப்பிராயப்படியேதான் நடக்க வேண்டுமென்று ஆங்கில அரசாங்கத்தாரைக் கட்டாயப்படுத்துகின்றன வென்றுமே சொல்ல வேண்டும்,

* * *

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அந்நியநாட்டுக் கொள்கையின் முக்கிய அம்சங்கள் தற்போது நடைபெறுவன. பேரல்லவே கடந்த காலங்களிலும், இந்தியாவிலும் இந்தியாவின்மூலமாக ஆசியா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய கண்டங்களிலும், பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தையும், கௌரவத்தையும் நிலை நிறுத்திக்கொள்ளக் கூடியவாறே நிர்ணயிக்கப்பட்டு வந்திருக்கின்றன. இவ்வாறிருந்தும் இந்திய ஜனங்கள் தங்களது அந்நிய நாட்டுக் கொள்கையைப்பற்றியாவது, தங்கள் நாட்டின் பாதுகாப்பைப் பற்றியாவது எதுவும் சொல்லுவதில்லை. இந்தியாவின் நல் உரிமைகளையும் உலகிலுள்ள இதரபாகங்களின் நல் உரிமைகளையும் நன்கு பாதுகாக்கக் கூடியதான அந்நிய நாட்டுக்கொள்கையை ஏற்படுத்திக்கொள்ளும் விஷயத்தில் இந்தியத்தலைவர்கள் சிறிதும் அக்கறையில்லாதவர்களாக இருக்கின்றனரென்றே எண்ண வேண்டியிருக்கிறது.

* * *

ராஜீய விஷயங்களிலும், கடற் படைப் பெருக்கிலும், போதுமானதாக, நிலைமையி

லும், கைத்தொழில் முன்னேற்றத்திலும் பிறவற்றிலும் இங்கிலாந்துடன் அமெரிக்கா டைமாகப்போட்டி போட்டுவருகிறது. இத்தருணத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கும் இங்கிலாந்திற்கும் சச்சரவு ஏற்படுமானால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இருந்த விடம் தெரியாமல் அழிந்துபோய்விடுமென்பது திண்ணம். பல கட்சிகளையும் சேர்ந்த ராஜதந்திரிகள் அனைவரும் எவ்வித அபிப்பிராயபேதமுமின்றி, அமெரிக்காவுடன்டகைமை யேற்படாமலிருக்கும் பொருட்டே, இங்கிலாந்திற்கு விரோதமாகவிருக்கும் மற்றெந்நாட்டை நசுக்க அமெரிக்காவின் உதவியைப் பெறும் பொருட்டும் அந்நாட்டிற்குச் சகல விதமான சாதகங்களையும் செய்து கொடுக்க இணங்குகிறார்கள். அமெரிக்க நாட்டை விரோதித்துக் கொள்ள அவர்கள் விரும்பவில்லை. ஐரோப்பாவிலும் ஆப்பிரிக்காவிலும் பிரான்ஸ் தேசம் இங்கிலாந்திற்குப் பலமான போட்டியாக விருக்கிறதென்பதையும், ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் ருஷியா இங்கிலாந்திற்குப் போட்டியாக விருக்கிற தென்டதையும், இங்கிலாந்து ஆசியாவில் அதிக்கம் பெற்றிருப்பதற்கு ஜப்பான் பெரும் எதிரியாக விருக்கிறதென்டதையும் இங்கிலாந்திலுள்ள டல்வேறு விதமான அரசியல் கொள்கைகளையுடையவர்களும் ஏற்றுக் கொள்ளுகின்றனர். இவ்வித எண்ணம் அவர்களெல்லோருக்கும் இருப்பதால் இங்கிலாந்தின் கலவுரிமைகளுக்குப்பாதகமாயிருப்பவர்களை எவ்வகையில் அடக்கலாமெனத் தீர்மானிப்பதிலேயே தங்களது கவனம்முழுவதையும் அவர்கள் செலுத்திவருகின்றனர்.

* * *

டால்வின் தலைமையின் கீழ் இங்கிலாந்தில் குறுகிய நோக்கமுள்ள கட்சியாரின் மந்திராலோசனை சபை ஏற்பட்டபிறகு உலக அரசியல் விஷயங்களில் பிரிட்டிஷாரின் செல்வாக்கை அதிகப்படுத்தும் பொருட்டு பலவிதமான சூழ்ச்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன வென்பது இப்பொழுது நன்கு தெளிவாகி விட்டது. ராம்சே மாக்டனால்டின் தலைமையின் கீழ் நடைபெற்ற தொழிலாளர் அரசாங்கம் வீழ்ந்ததும்வரை பிரான்ஸ் தேசத்திற்கு விரோதமாக இங்கிலாந்து ஜெர்மெனி தேசத்திற்கு உதவி செய்து வந்திருக்கிறது. உண்மையைக்கூறுமிடத்து உலக அரசியல் விஷயங்களில் ஆதிக்கம் பெறுதவாறு பிரான்ஸ் தேசத்தை ஒதுக்கித்தள்ளிவிட வேண்டுமென்பதே இங்கிலாந்தின் முக்கிய நோக்கமாக இருந்து வந்திருக்கிறதென்று தான் சொல்லவேண்டும். இந்த நோக்கத்துடன் ௧௯௧௯-ம் வருஷம்முதல் ௧௯௨௪-ம் வருஷம்வரை பிரிட்டிஷ் அரசியல் நிபுணர்கள் வெகு முயற்சிகள் செய்துவந்திருக்கின்றனர். இவ்வைந்து வருஷ முயற்சிக்குப்பின் பிரிட்டிஷ் ராஜ தந்திரிகள் பிரான்ஸ் விஷயத்தில் தங்களது நோக்கம் நிறைவேறுதென்பதை நன்கு கண்டுகொண்டார்கள். அமெரிக்காவிற்கும் பிரான்ஸிற்குமுள்ள நட்பும், போலந்து, ஜெக்கோஸ்லோவிக்கா முதலிய தேசங்களின் நேசத்தைப் பிரான்ஸ் பெற்றிருந்ததுமே இங்கிலாந்தின் நோக்கம் நிறைவேருததற்கு முக்கிய காரணங்கள். பிரான்ஸின் அழிவிற்கு அமெரிக்க முதலாளிகள் இணங்கமாட்டார்களென்பதை இங்கிலாந்து நன்கு உணர்ந்துகொண்டது. பால்கன் நாடுகள் பிரான்ஸ் தேசத்திற்கு உதவிசெய்வதோடு பிரான்ஸிற்கும் ருஷியாவிற்கும் நட்பைஏற்படுத்து மென்பதையும் இங்கிலாந்து அறிந்து கொண்டது.

* * *

இவற்றோடு நில்லாது, பிரிட்டிஷாரின் கொள்கையை முன்னிட்டு, பிரான்ஸ் பொருளாதார சம்பந்தமாக ஜெர்மனியுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளுமென்று நினைக்கக்கூடிய நிலைமையும் ஏற்பட்டு விட்டது. கீழ்நாடுகளில் ஜப்பானுடன் ஓர் ஒப்பந்தம்செய்துகொள்ளபிரான்ஸ் செய்த முயற்சிகள்தான் இங்கிலாந்திற்கு மிகுந்த துன்பத்தைக்கொடுத்தது. பொருளாதார விஷயங்களையும், வியாபாரவிஷயங்களையும் முன்னிட்டு இவ்வுடன்படிக்கை ஏற்படுவதாயிருந்தது. இவ்விரு தேசங்களுள்ளும் உடன்படிக்கை ஏற்பட்டு இவை இரண்டும் ஒன்று சேருமானால் இவைகளின் ஒன்றுபட்ட கடற்படையையும், தரைப்படையையும், ஆகாயப் படையையும் இங்கிலாந்தும் பிரிட்டிஷ் குடியேற்றநாடுகளும் தோல்வியுறச் செய்ய முடியாதென்பது திண்ணம். மேலும் ஐரோப்பாவிலுள்ள இதர தேசங்களும் பிரான்ஸிற்கு உதவிசெய்யக்கூடும். அதுவுமல்லாமல் பிரஸ்தாப உடன்படிக்கை, பிரான்ஸ், ஜப்பான், ருஷயா, ஜெர்மனி ஆகிய நான்கு தேசங்களும் ஒன்றுபடுவதற்கு ஆஸ்பதமாயிருக்கவுங்கூடும். இங்கிலாந்திலுள்ள குறுகிய நோக்கமுள்ளகட்சியார் இவ்வாபத்துக்களையெல்லாம் எதிர்பார்த்து ஜப்பானுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு பிரான்ஸூம்ஜப்பானும் ஒன்றுபடாதவாறு செய்து விட்டனர். பின்னர் பிரான்ஸுடன் உடன்படிக்கைசெய்துகொண்டனர். அதன் பிறகு தாராளக்கட்சி யாசாங்கத்தார் ஆதிக்கத்திற்கு வந்ததும் ஜெர்மனிக்கு விரோதமாக ருஷியாவுடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். இவ்வுடன்படிக்கைகள் உலக அரசியல் விஷயங்களினின்றும் ஜெர்மனியை ஒதுக்கித்தள்ளிவிட்டன. இவ்வாறு ஒதுக்கித்தள்ளப்பட்டது தான் ஜெர்மனியின் அழிவிற்கு முக்கியகாரணமாக விருந்தது,

"மாடர்ன் ரெவியூ"

(இன்னும் வரும்.)

## தமிழ்நாட்டு தேசீய சபை.

தமிழ்நாட்டுதேசீயசபையின்பொதுக் கூட்டமொன்று சென்ற புதனன்று மாலை உ மணிக்கு திருச்சியில் ஸ்ரீமான் வரதராஜலு நாயுடு அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. ௬0 அங்கத்தவர்கள் விஜயஞ் செய்திருந்தனர். தலைவர் தனது முன்னுரைப்பிரசங்கத்தை முடித்து விட்டுக்கீழ் காணும் தீர்மானத்தைப் பிரேரேபித்தார்:—

"குறிப்பிட்ட தேசீயக் கொள்கையில்லாமல் குருகுலத்தை நடத்தி வருவதால் தமிழ் நாட்டில் வகுப்பு வேற்றுமை வளர இடமேற்பட்டிருப்பதால் குருகுலத்திற்கு ரூ. ௫000 கொடுத்ததற்கு இச்சபை வருந்துகிறது."

இத்தீர்மானத்திற்குப்பலர்பலதிருத்தப் பிரேரணைகள் கொண்டுவந்தனர். விவாதம் வெகு பலமாக நடைபெற்றது. இறுதியில் ஸ்ரீமான் எஸ். ராமநாதன் அவர்களது திருத்தப்பிரேரணை நிறைவேறியது. அதாவது திருத்தப் பிரேரணையாவது:—

"இந்திய சமூக வாழ்க்கையில் பிறப்பினால் எவருக்கும் ஏற்றத்தாழ்ச்சி ஏற்படுத்தக்கூடாதென்றும், இக்கொள்கையை தேசிய இயக்கத்தில் ஈடுபட்ட ஸ்தாபனங்கள் அனுஷ்டிக்க வேண்டுமென்றும், இக்கொள்கையை சேரமாதேவி குருகுலத்தில் அனுஷ்டானத்திற்குக்கொண்டுவர ஓர் சபை இக்கூட்டம் நியமிக்கிறது."

ஸ்ரீமான்கள் ராமநாதன் (மாயவரம்) அ. வெ. தியாகராஜ செட்டியார் (தேவகோட்டை) ராமசாமிநாயக்கர் (ஈரோடு) ஆகிய மூவரும் அச்சபைக்கு அங்கத்தவர்களாக நியமிக்கப்பட்டார்கள்.

பின்னர் தலைவரிடம் நம்பிக்கையிருப்பதாக ஸ்ரீமான் வி. எஸ். சாமிநாத செட்டியார் கொண்டுவந்த தீர்மானம் பெரும்பாலோர்களால் ஆதரிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது.

கடைசியாக ஸர். பி. தியாகராய செட்டியாரின் மரணத்திற்கு வருந்துவதாகத்தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது.

## தமிழர் கூட்டம்,

திருச்சியில் சென்ற வியாழனன்று ஸ்ரீமான் மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்களது அக்கிராசனத்தில் கூடிய தமிழர்கள் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்:—

(௧) சேரமாதேவிக் குருகுலத்துக்குப் பணவுதவி செய்தது ஸ்ரீமான் வ. வெ. சு. ஐயரை நம்பியே. ஆதலால் அஃதுஐயர் பணங்கொடுத்தவர்களைக் கூட்டி ராஜிநாமாக் கொடுக்கவேண்டியது நியாயமாகவிருக்க, அவ்வாறு செய்யாமல் அங்குவேலை செய்பவரிடம் தமது தலைமைஸ்தான ராஜிநாமாவைக்கொடுத்ததை இக்கூட்டம் கண்டிக்கிறது.

(உ) ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயரவர்களின் ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ளச் சிறிதும் அதிகாரமில்லாத சிலர் அதனை ஏற்றுக்கொண்டதோடமையாது குருகுலக் கிளர்ச்சிக்கே பெருங்காரணமாகவிருந்த ஸ்ரீமாந் மகாதேவஐயரைத் தலைவராகவும் தெரிந்தெடுத்ததை இக்கூட்டம் பலமாகக்கண்டிக்கிறது.

(௩) குருகுல நடைமுறையானது நேரான வழியில் நடைபெறவில்லை. ஆனதால் அதைத்திறம்பட நடத்துதற்குப்பின் வரும் சபையை இக்கூட்டம் நியமிக்கிறது. இச்சபையாரிடம் குருகுல சம்பந்தமான சகல பொறுப்புகளையும் ஒப்புவித்துவிடவேண்டுமென்றும் இதற்கு ஐயர் ஓர் மாதகாலத்துக்குள் இணங்காராயின் வாங்கிய பணத்தைக்கேட்பவருக்குத்திருப்பிகொடுத்துவிடவேண்டுமென்றும், ஐயர் இவ்வாறு செய்யாவிட்டால் ஐயரிடமிருந்து குருகுல சொத்துக்களைப்பெறுவதற்குரிய முறைகளை இச்சபையார் அனுஷ்டிக்கலாம் என்றும் தீர்மானிக்கிறது. சபை அங்கத்தவர்கள் :-(காரியதரிசி) வயி.சு. ஷண்முகம் செட்டியார் (௧) டாக்டர் வரதராஜலுநாயுடு (உ) ஆர். கே. ஷண்முகம்செட்டியார் (௩) மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் (௪) ராய. சொக்கலிங்கம் செட்டியார் (௫) ஆகிய ஐவராவர்.



## திரு. மகாதேவ ஐயரது சூழ்ச்சிகள்.

—o—

சிங்கப்பூரிலிருந்த திரு. மஹாதேவ ஐயர் பங்குனி உத்தரவிழா சமயத்தில் கோலாலம்பூர் வந்தார். குருகுல விஷயம் தாய் நாட்டில் மிகவும் கேவல நிலைமையில் வந்துவிட்டதை அறிந்த அதன் பிரதிநிதி ஐயர் எவ்விதமான தகாச்செய்கைகள் செய்தாயினும் தனவைசியர்களிட மிருக்கும் பணத்தைக்கைப்பற்றிவிடவேண்டுமென்று எண்ணி விஷயங்களைப் பலவிதமாகப்புரட்டி, ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டு திரிந்தார். ஆள் ஆளாகக்கண்டு, "நான் பிராமணன், மனம்நோகும் வண்ணம் செய்வதுசரியா? நீங்கள் புண்ணியஞ் செய்கின்றவர்களல்லவா? இந்தப் பாவத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ளலாமா? பத்திரிகைகளில் எழுதும் புரட்டான விஷயங்களை நீங்கள் பொருட்படுத்தி இந்தத் தர்மகாரியத்திற்கு இடையூறு செய்யலாமா? பணம்வாங்கும் பொழுது எந்த நிலைமையில் குருகுலம் நடந்ததோ அந்தநிலையில் தான் குருகுலம் இன்றும் நடைபெறுகிறது. என்றும் இப்படித்தான் நடைபெறும். வித்தியாசம் என்று சொல்வதற்கு எவ்விதத்தாலும் முடியாது. நாங்கள் வித்தியாசமாக நடத்துவோமா? தேசத்துக்காக உழைக்கும் நாங்கள் இப்படி விதர்ப்பமான காரியங்கள் செய்யமாட்டோம். இதுவெல்லாம் ஸ்ரீமான் வரதராஜலுநாயுடு எழுப்பிவிட்ட குதர்க்கமேயன்றி வேறன்று. பிராமணனும் பஞ்சமனும் ஒன்ருக இருந்து உண்ணவேண்டுமெனபது உங்கள் அபிப்பிராயமா? வைதீகத்தைத் தொலைப்பது உங்கள் தர்மமா?" என்று இன்னோன்ன அர்த்தமற்ற வார்த்தைகளைப் புலம்பிக்கொண்டே திரிந்தார். இதற்குச் செவி கொடுப்பார் அநேகர் இலரேனும், திரு. ஐயர் இரண்டொருவரிடம் சென்று; கண்ணால் ஜலம்விட்டு அழுது இரந்து அவர்களைத் தம் கபட வார்த்தைகளால் வசப்படுத்தி யிருப்பதாகத் தெரிகிறது.

கோலாலம்பூர் தண்டபாணி கோவிலுக்குத் திரு. ஐயர் வந்த பொழுது யாழ்ப்பாணத்துத் தமிழ் சகோதரர் ஒருவர் அவரைக் கண்டு "குருகுலத்தில் வித்தியாசம் இல்லாது நடத்துவோம், அவரவர்களாலியன்ற உதவிசெய்து பொருள்கொடுங்கள் என்று சொல்லிப் பணம் வாங்கினீரே! இப்பொழுது அப்படியில்லை யென்பது மஹாத்மா முன்னிலையில் புலனாகிவிட்டதே. மகாத்மா கட்டளைப்படி நடப்பதாக வாய்ப்பறை சாற்றுகிறீரே. பணம் கொடுத்தவர்களுக்குப் பிரியமில்லாதவைநடத்த அவர்கள் பணத்தைப் பெறக்கூடாதது மாத்திரமல்ல. பெற்றிருந்தாலும் திரும்பக் கொடுத்து விடவேண்டுமென்று மஹாத்மா சொல்லியிருக்கிறீரே. ஆகையினால் நான் மற்ற நண்பர்களிடம் சொல்லி வாங்கித் தந்த வெள்ளி பத்தையும் தாருங்கள்" என்று கேட்டார். ஐயர் ஒன்றும் பதில்சொல்லவில்லை.

விஷயத்தின் தத்துவத்தை அறிந்துகொள்ளப் பெறுதிருப்பவரிடம் சென்று ஐயர் பொய்யும் புரட்டுமாகச் சொல்லி வஞ்சிப்பது எற்றுக்கோ? கேவலம் சர்வசாதாரணமான மனிதனும் அஞ்சும் பச்சைப் பொய்களைச் சொல்லி, "ஏனையா! இப்படிச் சொல்லுகிறீர்களே" என்று கேட்டால் சாதுர்ய வார்த்தைகளால் வார்த்தைகளை மறைத்து, "ஞாபகமில்லாமல் ஒருவாறு சொல்லியிருப்பேன், செய்திருப்பேன்" என்று பின்னும் இரண்டொரு புதுப் பொய்களைச் சொல்லி நழுவிவிடுகிறார் இப்படிப் பொய் சொல்லிவிட்டோமே; இனியேனும் சொல்லாதிருப்போம் என்ற எண்ணம் ஐயரிடம் இருப்பதாகத் தெரியவில்லை எப்படியேனும் என்ன செய்தேனும் பணத்தைப் பெற்றுக்கொண்டு செல்லவேண்டுமென்பதே அவர் நோக்கம். திரு. வ. வெ. சு. ஐயர் "தங்கள் முயற்சியால் ஒன்றும் ஆகாவிட்டால் புறப்பட்டு வந்து சேருங்கள்" என்று தமக்கு எழுதியிருக்கும் கடிதத்தைச் சிலரிடம் காட்டிப் பரிதாபகரமாகநிலைமை ஏற்பட்டுவிட்டதே என்று வருந்தினர். ஆனால் எச்செயல் செய்தேனும் பணம் பெறுவது என்ற எண்ணத்தை ஐயர் விடாதிருந்தது வ. வெ. சு. ஐயர் எழுதிய கடிதத்திலுள்ள "தங்கள் முயற்சியால்" என்ற வார்த்தையைச் செயலிற் காட்டுதல் போலும்! "குருகுலம் ஒழுங்கு வந்து சீர்ப்படுமானல் பாங்க் உண்டியலில் பணம் வரும். நீங்கள் ஏன் இங்கிருந்து வம்பு செய்கிறீர்கள்? தாய்நாடு சென்று அங்கு வேண்டிய காரியங்களைச் செய்யுங்கள்" என்று சொல்லும் அன்பர்கள் வார்த்தையைச்செவி கொடுத்தும் கேட்காது ஓடினர். ஏன் அப்படிச் செய்யக்கூடாது என்று இன்னொருவர் கேட்டால், "இந்தியாவில் தலைவர்கள் சொல்லும் மாதிரிக்கு நாங்கள் ஒத்துக்கொள்வது, தர்மத்துக்கும் அஹிம்சைக்கும் விரோதமாதலால் முடியாமலிருக்கிறது." என்று சாமர்த்தியம்பண்ணுகிறார்.

பிறகு ஈப்போ வந்து தனவைசியர் வீடுவீடாகச் சென்று சொன்னார். அவர்கள், "இதைப்பற்றி எங்களுக்கு ஒன்றுந் தெரியாது. மஹாத்மா சொல்வதைக்கூட நீங்கள் ஒப்புக் கொள்ளாமல் வம்பு செய்வதென்றால் அதற்கு ஊர் இதுவல்ல. வீணாக எங்களுக்குள் கலகத்தை உண்டாக்காமல் போய்விடுங்கள்" என்று சொன்னார்களாம். "நான் பணம் வாங்குவதற்காக வரவில்லை. என்னைப்பற்றிப் பேதமாக எண்ண இடமில்லையென்பதை எடுத்து விளக்கவே வந்தேன்" என்று சிலரிடம் சொன்னாராம். வேறு சிலரிடம் பணம் வாங்காமல் எப்படி நான் போவேன் என்று பகர்ந்தாராம். அதன் பிறகு ஐயர் பினங்கு வந்தார். வந்து பல அன்பர்களிடம் ஈப்போவில் சொல்லியமாதிரியெல்லாம் சாமர்த்தியமாகச்சொன்னார். இவரது பொய்ச்சூழ்ச்சிக்குஅங்கும் செவிகொடுப்பார் இல்லாது போகவே இனித்தம் முயற்சியால் மலாய் நாட்டில் ஒன்றுமே ஆகாது என்பது நன்றாகத்தோன்றி விடவே குமாரதனவந்த சித்திரைமீ ௫உ க்கு கப்பலில தாய் நாட்டுக்கு புறப்பட்டு வருகிறார்.

ஐயர் இந்நாட்டிற்கு வந்து நன்மக்கள் பலர் முயற்சியால் குருகுலத்துக்கு ஏராளமாகப் பணம் சேர்ந்தது. தேசம் ஒப்புக்கொள்ளாத சில பிராமணர்களின் நலம் மட்டும் கருதி மற்றவர்களை அசுத்தர்களென நடத்துகிற நிலையில் இன்று குருகுலம்வந்துவிட்டதால் இனி எந்தக் தர்மத்துக்குமே பொருள் கொடுப்பது சரியல்ல என்ற வரையில் வந்துவிட்டது. அறிஞர்கள் என்னுவதுபோல் நாமனமாந்தது உண்மையே. என்ன ஆனாலும் குருகுலம் சரியாக நடைபெறுதவரை பணம் கொடுக்கக் கூடாது என்ற எண்ணத்தை உறுதிப்படுத்திச்செய்கையிலும் காட்ட வேண்டும்.

திரு. மகாதேவ ஐயர் பினங்கிலிருந்து தாய்நாட்டிற்குப் புறப்படும்போது சும்மா புறப்பட்டால் தம்முடை விஷயம் புரட்டு என்பது சாதாரணமான ஜனங்களுக்குங்கூடத் தெரிந்துவிடுமென எண்ணி, அவருக்குச் சார்புடைய, விஷயம் அறிந்து கொள்ளப் பெறுத, ஒரு சிலரிடம் போய், தாம் மலாய் நாட்டில் இதுவரை குருகுல விஷயமாய் மிக உண்மையோடு உழைத்து வந்திருப்பதாகப் பெரிய பெரிய புரட்டுக் கதைகளைக் கட்டிவிட்டு

## சேரமாதேவி குருகுலம்.

(திரு. வயி௬. ஷண்முகம் செட்டியார் எழுதுகிறார்.)

சென்றவாரப்பத்திரிகையில் இது பற்றி எழுதிய விபரம் நண்பர்கட்குத்தெரியும். குருகுல நடைமுறைகளைச் சீர்படுத்த தமிழர்கள் ஏற்படுத்திய பஞ்சாயத்தார் மூலம் குருகுலத்தைத் திறம்பட நடாத்த ஐயரவர்கள் இணங்குதல் நலம். குருகுலம் கண்ட பெரு நோக்கங் கொண்ட ஐயர் குருகுலத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்று விரும்புவதேதர்மமாகும். கேவலம் முனைப்பை விடுத்து நடுநிலையில் நின்று குருகுலத்தை ஏத்தகைய சிரமத்துக்கும் இடையே நடத்துவதற்கு முற்படுவதே பெரியார் செயலாகும். வர்ணாசிரம தர்மம் என்பதில்; பார்ப்பதால்— தீண்டுவதால், பாவம் நேரலாம் என்பதற்கு இடமில்லை என்று பண்டிதர்கள் கூறுகிறார்கள். தீண்டாமையை விலக்குவதற்கு முன் திருஷ்டி தோஷம் நீக்கப்பெற வேண்டுமல்லவா? பார்ப்பதே கூடாதெனில் தீண்டுவதற்கு எவ்வாறு இடம் கொடுக்கமுடியும்?

ம், தர்மப்பணம் ஒருவரிடம் டிபாஸிட்டாக வைத்திருப்பதை அவர்கள் எப்படித் தரமுடியாதென்று சொல்லலா மென்றும், தர்மப்பணத்தைக்கொடுக்கக்கூடாது என்று ஒரு சபையார் தீர்மானித்தல் என்பது எந்த முறையில் சேர்ந்தது என்றும், தமிழர் மகாநாட்டுத் தீர்மானம் இதைக் கட்டுப்படுத்துமா வென்றும் பல சட்டங்கள் பேசி, இது விஷயங்களைப்பத்திரிகை களுக்குத்தனியே எழுதும்படி தூண்டி விட்டுச் சென்றிருப்ப தாக த்தெரிகிறது. அதோடு ஐயரை உண்மையானவரென நம்பி சில அன்பர்கள், பத்திரிகைகளுக்கு விஷயம் எழுதியிருப்பதாகவும் வதந்தி. ஆதலால் அப்படி யொரு வியாசம் திருமஹாதேவ ஐயரின் பெரும்புரட்டுச் செய்கையை உண்மையென ஆதரித்து வெளிவருமேல் அதுவும் அன்னாரது கொடிய அக்கிரமச் செய்கைளி லொன்று என எண்ணி அன்பர்கள் அதைப் பொருட் படுத்தாது "மலேயா தனவைசியர் மகாநாட்டு சபையார்" தீர்மானித் திருக்கிறபடி உண்மையை யறிந்து நடக்கவேண்டுவது அவசியமாகும்.

உண்மை உணர்ந்தோன்.

மகாத்மா தீண்டாமை விலக்கைப் பற்றி வற்புறுத்தி வருவதை யாவரும் அறிவர். வர்ணாசிரம தாமத்திற்கும் இப்போலி வாதத்திற்கும் சம்பந்தமே இல்லை. உடனுண்பது வர்ணாசிரம தர்மத்திற்குவிரோதம் எனறும், வர்ணாசிரம தர்மத்தை அழிக்க முற்படுகிற கூட்டத்தில் தாம் இருப்பது பாவம் என்றும் திருச்சியில் நடந்த தமிழ் மகாண தேசிய சபைக் கூட்டத்தில் ஸ்ரீமான் எம். கே. ஆச்சாரியார் என்பார் கூறினர்.

உடனுணவுகூடாதென்பது திருஷ்டி தோஷம் அனுஷ்டிக்கப்பட வேண்டுமெனக்கூறுவதாகும். திருஷ்டியினால் தோஷம் உண்டெனக் கருதும் இவர்போன்றார் தீண்டாமை விலக்கை எப்படி ஆதரிப்பார்? ஆகவே உடனுண்ண மறுப்போர் தீண்டாமை விலக்கை ஆதரிக்க முடியாதென்பது வெளிப்படை. தீண்டாமை விலக்கப்படவேண்டுமென தேசிய மகாசபையும் மகாத்மாவும் தொண்டியற்றி வருவதை யாவரும்அறிவர். தேசியமகாசபையின்முக்கிய நோக்கங்களில் ஒன்றாகியதீண்டாமை விலக்கை தேசிய மகா சபையின் தமிழ் நாட்டுத்தலைவராகிய டாக்டர் நாயுடு அமுலுக்குக் கொண்டுவர முயல வேண்டுவது அவரது கடமையாகும். தீண்டாமையைவிலக்குவதற்குமுன்பார்ப்பதனால்தோஷமென்ற அநாகரிக முறையை விலக்க முற்படுவதைப் போலிப் பிராமணரும் அவர்தம் பத்திரிகைகளும் மறுக்கின்றன. இதிலிருந்து தீண்டாமை விலக்கை மேற்கண்ட பிராமணக் கூட்டம் முழுவதும் எதிர்ப்பதாக யாவருக்கும் புலப்படும். ஆகவே ஐயர் இவ்விடர்ப்பாடான கூட்டத்தாரின் சூழ்ச்சியினின்றும் விலகி விடவேண்டுவது பேரறிவுடமை ஆகும்.

டாக்டர் நாயுடு இவ்விஷயத்தில் தலையிட்டிருப்பதானது அவர் தேசிய சபையின் தமிழ் நாட்டுத்தலைவர் என்ற முறையில் முற்றிலும் நியாயமாகும். தீண்டாமையை விலக்குவது காங்கிரசின் நோக்கமாக இருக்க, அதைக் காட்டிலும் மிகக்கொடுமையும் அநாகரிகமுமான திருஷ்டி தோஷத்தை; (காங்கிரசின் உதவி பெற்று தேசிய வளர்ச்சிக்குரிய வழியில் நடத்துவதாகக் கூறிய வ. வெ. சு. அய்யர்) குருகுலத்தில் வளர்க்க முற்படுவதைத்தடுக்க வேண்டுவது தேச மக்களின் பிரதிநிதியான தேசிய சபைத் தலைவர் கடமையே ஆகும். ஜாதிச் சண்டை என்று போலிவாதம் சொல்லி பிராமணர் ராஜிநாமாக்கள் செய்து தேசிய மகாசபையின் பிரதிநிதி ஸ்தானங்களைக் காலி செய்து பயமுறுத்துவது நகைப்பிற் கிடமாகும். தேசத்தாரால் பெரிதும் அவமதிக்கப் பெற்றடயர் என்ற ஆங்கிலேயனுக்கு பென்ஷன் இந்திய கவர்ன்மெண்டார் கொடுப்பதைஆக்ஷேபித்ததற்கும், தேசிய வளர்ச்சிக்கு இடையூறான முறையை தேசிய சபையின் உதவி பெற்ற ஸ்தாபனம் வளர்க்க முற்படுவதைத் தடுப்பதற்கும் வித்தியாசம் கூறமுடியுமோ? ஆகவே டாக்டர் நாயுடு அவர்கள் தேசிய சபைப்பணம் தேசிய வளர்ச்சிக்கு இடையூறான வழியில் செலவிடப்படக் கூடாதெனக் கூற முன்வந்தது முற்றிலும் நியாயமே!

தீண்டாமை விலக்கப்பட வேண்டுமெனத் தீர்மானித்த தேசியசபையின் நோக்கத்தையே அவர் அடிப்படையாகக் கொண்டு திருஷ்டிதோஷம் விலக இடங்கொடாத பொழுது, தீண்டாமை விலக இடமே இல்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து தேசிய தர்மத்துக்குப் போர் தொடங்கியிருக்கிறார் என்பதைத் தமிழ்நாட்டு மக்கள் தெளிவாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

ஐயர் எனக்கெழுதிய கடிதத்தில் பணங்கொடுத்தோரில் பெரும்பாலாரிஷ்டத்துக்குக் குருகுலத்தார் நடைமுறைகளைத் திருத்திக்கொள்வார்கள் என்றெழுதி யிருக்கிறார். அவ்வாறு செய்வது ஓர் வழியே. ஆனால் பணத்தின் அளவுக்குத் தக்கவாறு அவர்களது வாக்கு மதிக்கப்பெறல் வேண்டும். எவ்வழியாயினும் நியாயமான வழியைக் கைப்பற்றுவதுதான் பெரியார்கள் நடையாகும். தமிழர் கூட்டத்தின் பஞ்சாயத்தார் நோக்கத்துக்கு இணங்க நடத்த முடியாவிட்டால் சாக்குப் போக்குச்சொல்லி ராஜிநாமாவைப்பற்றிப்பேசுவது ஒழுங்கற்ற கேவலமான முறையாகும். குருகுலத்தை ஒப்புவிக்க முடியாதெனின் பணங் கொடுத்தோர் திரும்பவும் நடைமுறை பிடியாமல் பணத்தைக் கேட்டால் கொடுத்த பணத்தை அப்படியே திரும்பக் கொடுத்துவிட்டு ஐயரிஷ்டப்படி குருகுலத்தை நடத்தலாம். குருகுலத்தில் நன்னோக்கம் கொண்டோர் எண்ணப்படி நடத்த ஐயர் முற்பட்டு குருகுலத்தை சீர்படுத்தி நடத்தமுற்படுவார்கள் என்று இன்னமும் எதிர்பார்க்கிறோம்.



## பிறநாட்டுச் செய்தி.

பல்கேரிய பொது வுடமைக்கட்சியின்ரகசியசபை அங்கத்தினரான அயான்மானப் என்பவர் போலீஸாருக்குட்பட மறுத்ததனால் சுட்டுக் கொல்லப் பட்டார்.

* * *

தற்பொழுது இங்கிலாந்து சென்றுள்ள ரெடிங்பிரபு, தான் எக்காரணத்தை முன்னிட்டும் பாலஸ்தீனம் செல்லப்போவதில்லை யென பத்திரிகைப் பிரதிநிதி யொருவரிடம் அறிவித்திருக்கிறார்.

* * *

பிரஞ்சுக்காரர்கள் புதிதாக கடுயுத்தக் கப்பல்களைக்கட்ட ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். முதல் தடவையாக இதற்கு ௩-கோடி பிராங்குகள் கடன் வாங்க பிரஞ்சு ஜனப்பிரதிநிதி சபை அநுமதித்திருக்கிறது. இவ்வேலை இவ்வருஷமே துவங்கப்பெறும்.

* * *

கடந்த ஐரோப்பிய யுத்தத்தில் பிரபலமாகவிளங்கிய ஜெர்மன் தளகர்த்தர் வான்ஹின்டன்பர்க் இப்பொழுது ஜெர்மன் ராஜாங்கத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இச்செய்தி பொதுவாக நேசக்கட்சியார்களுக்கும், சிறப்பாக ஆங்கிலேயர்களுக்கும் மிகுந்த கவலையைக் கொடுத்திருக்கிறது.

* * *

எகிப்தியர்களைத் திருப்திப்படுத்தும்நோக்கத்துடன் கெய்ரோ நகரைப் பிரிட்டிஷார் காலிசெய்யப் போவதாகவும் சூயஸ் கால்வாயின் கரையோரத்தில் பிரிட்டிஷ் படைகளைக்கொண்டு போவதைப் பற்றி இங்கிலாந்தில் யோசனைசெய்யப்பட்டு வருகிறதென்றும் ஓர் பத்திரிகை கூறுகிறது.

* * *

பல்கேரியாவில் ராஜ்யக்குழப்ப மேற்படுத்த மாஸ்கோவிலுள்ள பொது வுடமைக் கட்சியினரும், அவர்களைச் சார்ந்தோரும் வெகுப்லமாக முயற்சிகள் செய்து வருகின்றனரென்றும், அவர்களது முயற்சிகளை எவ்வகையிலேனும் அடக்க வேண்டுமென்றும் பல்கேரிய அரசாங்க உள்நாட்டு மந்திரி பத்திரிகைகளுக்கு எழுதியிருக்கிறார்.

## இந்தியச் செய்தி.

தஞ்சை சிறையினின்றும்நான்கு வாலிபக் கைதிகள் தப்பி யோடிவிட்டனர்.

* * *

நவசாரி என்ற விடத்திலுள்ள ஜில்லா தண்ட அதிகாரி கதர் உற்பத்திக்காகப் பருத்தி வாங்க ரூ. ௨௫- கொடுத்துதவி யிருக்கிறார்.

* * *

பேராளத்தில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் வைத்திய சாலையை ஸ்ரீமான் என். கோபால்ஸாமி அய்யங்கார் ஏப்பிரல் மாதம் ௨௬-௨ மாலை திறந்து வைத்தார்.

* * *

வருகிற பம்பாய் சட்டசபைக் கூட்டத்தில் ஸ்ரீமான் ஜீ. பிரதான் ஸ்தலவாசிகளின் விருப்பப்படி சாராயக் கடைகளை மூடிவிட வேண்டுமென ஓர்மசோதா ஆலோசனைக்குக் கொண்டுவருவார்.

* * *

அகாலியக் கைதிகளை நேரில் சென்று பார்வையிடும் பொருட்டு இந்திய சட்டசபை யங்கத்தினர் இருவர் நாபாவிற்கு வரலாமா வென்று பண்டிதர்நேரு அச்சமஸ்தான நிர்வாகியைக் கேட்டிருந்ததற்கு அவர் அனுமதி கொடுக்க மறுத்துவிட்டார்.

* * *

வங்காளப் புதிய அவசரச்சட்டப்படி முன்னர் ஓர் சமயம் பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருந்தவர்களும், தற்பொழுது லிட்டன் வைத்தியப்பள்ளிக்கூடத்தில் படித்து வருபவருமானசாருதத்தன் அதிகாரி, புரோஜேந்தாமோகன் பிரம்மா ஆகிய இருவர்களும் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

* * *

வடமேற்கு ரயில் பாதையில் வேலைநிறுத்தம் வெகுமும்முரமாய் நடைபெற்று வருகிறது. இவ் வேலைநிறுத்தத்திற்கு விரோதமாக ரயில்வே அதிகாரிகள் தீவிரமாகப் பிரசாரம் செய்யத் தலைப்பட்டிருக்கின்றனர். ரயில்வேத் தொழிலில் பயிற்சிபெற்ற ஒருகூட்டம் துருப்புகள், ஏஜண்டின் வேண்டுகோளின் மேல் அனுப்பப்பட்டிருக்கின்றன.

## வைசிய நாட்டுச் செய்தி.

### தேவகோட்டை.

(நமது நிருபரிடமிருந்து.)

யூனியன்போர்டு:—இச் சபையில் அக்ராசி தலைவரின் ஆட்சி ஏற்பட்டது முதல் கூட்ட அறிவிப்பு முதலியன பத்திரிகை நிருபர்கட்கு அனுப்பப்படுவதில்லை. சுமார் இரண்டொரு கூட்டம் முன்கடிதம் எழுதிக்கேட்டதற்கும் அக்ராசி தலைவர் இதுவரையும் பதிலளித்ததில்லை. மேலும் வரி செலுத்துவோரின் உரிமைகளை அன்னார் மதித்து நடந்துகொள்வதில்லை எனவும் ஏதேச்சாதிகாரம் நடத்தி வருவதாயும் கேள்விப்படுகிறேன். அன்னாருடைய இயல்பு எனக்கு நேரிலும் தெரியும். ஸ்தல ஸ்தாபன சட்டத்தையும் அன்னார் படித்துணர்ந்ததாகத் தெரியவில்லை. அறிவாளியாயும் கல்வியில் பிறழாதவராயும் தியாகபுத்தி உள்ளவராயுமுள்ள ஒருவர் இப்பதவிக்கு நியமிக்கப் பட்டிருந்தால் பொதுமக்களின் உரிமைக்குப் பங்கம் நேரிடாது. இந்நியமனம் செய்ததாலூக்கா ஸ்தலஸ்தாபன தலைவர்கள் இனியாவது கிராம ஸ்தலஸ்தாபன விஷயத்தில் கட்டம்வைத்து வரிசெலுத்துவோரின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

* * *

### பனையப்பட்டி.

இவ்வூரில் ஸ்ரீமான். சி. மு. சின்னய்யா செட்டியாரவர்களால் கட்டப்பெற்றிருக்கிற ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் திருமடத்தில் பிரதி வருஷமும் நடந்துவருவதுபோல், இவ்வருஷமும் நாளிதுமீ ௯௦௨ முதல் ௸ சுவாமியவர்களின் சரித்திரம் வாசிக்கப் பெற்று ௩௨ சரித்திரம் முடிவுற்றது. வந்திருந்த அடியார்களுக்கும் மற்றையோர்களுக்கும் அன்னமளிக்கப்பெற்று சுவாமியவர்கள் திரு. உருவப் படத்துக்கு பூஜை முதலியன செய்யப்பட்டன. சுவாமியவர்களின்படத்தை ரிஷபவாகனத்தின்மீதெழுந்தருளச்செய்து கூழிபிறைச்சிவனடியார்திருக்கூட்டத்தாரின் தேவார திருவாசக திருப்புகழ் முதலிய பஜனைகள் பல இன்னிசைக் கருவிகளுடனும் நடைபெற, வலம் செய்துவைக்கப்பெற்றது. பூர்த்தியான தினத்தன்று ஏராளமான அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னமளிக்கப்பெற்றது என ஒருநிருபர் எழுதுகிறார்.

* * *

### சிராவயல்.

இவ்வூரில் திருவாளர் மு. கா. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்களின் நன்முயற்சியால் துவக்கப்பெற்று, சிறப்புடன் நடைபெற்று வரும் காந்திவாசகசாலையின் இரண்டாவது ஆண்டு விழா சென்னை "நவசக்தி" பத்திராதிபரும் உத்தமதேசாபிமானியுமான திருவாளர் திரு. வி. கலியாண சுந்தரமுதலியார் அவர்களின் அக்ராசனத் தலைமையின் கீழ் இம்மதி ௨௯ ம் நாள் மாலை ௪ மணிக்கு நடைபெறும். அதுகாலை பல தேசபக்தர்களும் விஜயம் செய்வார்கள். அன்பர்கள் அனைவரும் விஜயம் செய்யுமாறு கோரப்படுகிறார்கள், என ஒரு நண்பர் எழுதுகிறார்.



நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனை நாடிவந்த
கோளென் செயும்! கொடுங் கூற்றென்
செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்.

காரைக்குடி. சித்திரைமூ உக-உ

## அந்தோ! குருகுலமே!!

குருகுலமே! ஏன் இவ்வாறு நீ நடந்து கொள்ளுகிறாய்? தமிழ்க் கல்வியைப் பெரிதும் வளர்ப்பாய் என்றல்லவா, சமத்துவத்தைத் திறம்பட நிலைநாட்டுவாய் என்றெண்ணியல்லவா, படுகுழியில் வீழ்ந்து கிடக்கும் பாரத அன்னையைத் தூக்கி நிறுத்தி, அரியணையிருத்தி, மணிமுடி சூட்டி மாநில மாள மாண்பொடு வைக்கும் மாபெரும் வீர மணிகளை அளிப்பாய் என்றெண்ணி யல்லவா நின்னை வளர்க்க எம் மனையார் முற்பட்டனர்? இவை கொண்டன்றோ நின்னைப்பல்லாற்றானும் ஒப்புமாறு நாம் பன்முறை பகர்ந்தோம்? நீ உயரிய செயலொடு நின்று நலம் பயப்பாய் என்று நின் தலைவர் புகன்ற மொழிகளை நம்பி எம்மனோர் ஏராளமான பொருள்களை ஈந்தனர். அவ்வாறு நின் நலன் நாடிப் பெரும் பொருள் கொடுத்த அருங் கொடையாளரின் திரு மனம் நோவ நீ இந்நாள் புரிந்து செல்கின்ற செயல் செப்புந்தரத்ததோ? ஆ! குருகுலமே!! நின் தலைவரின் சொல்லில்—செயலில் பெரு நம்பிக்கை கொண்டிருந்தோம் பண்டு. யாவும் நாளுக்குநாள் பொய்த்து விட்டன. நாளுக்கு நாள் நின் குழுவினர் தீச்செயலை மிகவும் பெருக்கிக்கொண்டு வருகின்றனர். கொடையாளர்களை நீங்கள் படுத்தும் இழிவிற்கோர் எல்லையுண்டோ? எவர் கொடையாளர்களாற் பெரிதும் வெறுக்கப் பட்டனரோ அவரே இந்நாள் உனக்குத்தலைவர்: அவரைத் தலைமைநிறுத்தியவர் கொடை வள்ளல்களை எவ்வளவு தூரம் மதித்து நடந்துகொண்டிருக்கின்றனரென்பதை எவர்க்கும் கூறவேண்டுவ தின்று.

அந்தோ! குருகுலமே!! தமிழ் நாட்டில் அரிதிற்றோன்றிய குருகுலமே!!! நின்னைத் தோற்றுவித்தோர் நின் ஆக்கத்திற் சிறிதும் கருத்துச் செலுத்தவில்லை. நின் சார்புறையும் மாணிடர்கள் செயலை நுணுகி நோக்கினால் நினக்கு அவர்கள் பெருங்கேடே தேடுகின்றார்களென்று வருத்தத்துடன் துணிந்து கூறவேண்டுபவராக இருக்கிறோம்.

பணங் கொடுத்தவர்கள், மாறுபட்ட இச் செயல்கண்டு, நெருங்குங்கால், திரு. வ. வெ. சு. ஐயர் தாம் செய்யவேண்டுவ தென்னை? தாம் அவர்கள் கூறும் செந்நெறி பற்றி நடத்தல் வேண்டும்; இன்றேல் அவர்களை அழைத்து அவர்கள்பால் குருகுலத்தை ஒப்புவித்தல் வேண்டும். இவ்விரண்டையும்விடுத்து, ஒரு சம்பந்தமு மில்லாத—இன்னும் மக்கட்கு அவர் இன்னின்னார் என்றுதெரியமுடியாத—அங்குஊதியம்பெற்று வேலைசெய்யும் எவரோ சிலரிடம் தாம் குருகுலத்தை ஒப்புவித்து விட்டதாகப் பத்திரிகைகளில் எழுதியிருப்பது பெருந் தவறு. இது இவ்வாறாக, அச்சிலர் இந்த ராஜிநாமாவை ஏற்றுக் கொண்டாராம்! புதிய தலைவரை நியமித்தனராம்! புதிய தலைவர்யார்? அவர்தான் மலாய்நாட்டில் பல செயற்கருஞ்செயல்கள்செய்து சமீபத்தில் திரும்பிவந்த திரு தி. ரா. மகாதேவ ஐயரவர்கள். இவர்களை நாம் எவர்க்கும் அறிமுகப்படுத்த வேண்டுவதின்று. இவர்கள் உலகம் அறிந்தவர்கள். இந்த வாரங் கூட இவர்கள் மலாய நாட்டிற் செய்த வேலைகளைப் பற்றி ஒரு கட்டுரை "ஆண்டிருந்து ஒரு அன்பரால் எழுதப்பெற்று வேறு பக்கத்தில் வெளிப்போந்திருக்கிறது. இவரைத் தலைமை நிறுத்தியவர்கள், இவர் அதற்குத் தகுதியுடையவர் என்று எண்ணித்தான் நிறுத்தியிருப்பர். அவர்கள் இவரைத் தகுதியுடையாராகக் கொள்ளும் நிலையினரா யிருக்கலாம். பணங்கொடுத்த வள்ளல்களில் நாமறிந்த உண்மையாளர் பலரும் தமிழ்நாட்டுப் பேரறிஞர்களும் இவர் தலைமை யிருத்தலை, அரியிருந்தாணை செலுத்த வேண்டிய ஒரு பீடத்தில் நரியிருந்தேதோ செய்தலை நிகர்ப்பவே கருதுகின்றனர்.

திரு. வ. வெ சு. ஐயர் இராஜிநாமாவும், திரு மகாதேவ ஐயர் நியமனமும், ஆண்டுள்ளார் பிற செயலும் செல்லத்தக்கன வல்ல. அவைகளைப்பற்றி நமக்குக் கவலையில்லை. நமக்குப் பொறுப்பாளி திரு. வ. வெ. சு. ஐயரே.

ஐயர் இன்னும் இணங்கிவரலாம் என்று நமது அன்பர் திரு. ஷண்முகச் செட்டியாரவர்கள் கூறுகிறார்கள். மேலும்மேலும் ஐயர் நடாத்திக் கொண்டு செல்லும் செயலை நோக்கும் பொழுது இணங்கி வருவாரென்று கூற முடியவில்லை. ஒருக்கால் வந்தால், அன்பர் செட்டியாரவர்கள் கூறுமாறு எல்லோரும் கூடி நல்வழி கோலி நடாத்த வழியுண்டு. இன்றேல் வீணே இக்கிளர்ச்சியைவளர்ப்பதில்பயனில்லை.

நாட்டில் குரோத எண்ணம மிக வளர்ந்து விட்டது. வளர்ந்து கொண்டு வருகிறது. இராஜீயவிஷயத்தில் ஒன்றுபட்ட மனமுடைய அறிஞர்பலர் பிரிந்து நிற்கின்றனர். உண்மையாளர் பலர் மனம் வருந்துகின்றனர். நாடு இக்குருகுலத்தால் பெருங் கலக்கம் எய்திவிட்டது. குருகுலம் இப்பொழுது பயந்த நன்மை யிது



தான், இதற்கு வரதராஜலுதான் காரணமென்று கூறுதல், எவர் கூறினும் அது பெருந்தவறாகும். இன்று குருகுலத்தில் நடக்கும் செயல் தவறென்பதை எதிர்க்கட்சி பேசுவோரினும் அநேகர் ஒப்புக் கொள்கின்றனர். அக்கோணிய நடைமுறையைத் திருத்திச் செந்நெறிப்பற்றி விட்டால் அன்பர் வரதராஜலு பேசாதிருந்து விடுவார். அதற்குப்பிரியமின்றேல், உடனே கேட்பவர் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுவதே. இதனையும் செய்யவில்லையானால் சண்டை ஒருநாளும் ஒழியாது.

செய்ய வேண்டிய காரியத்தை விடுத்து; நாடகத்தில் வேடம் பூண்டு வருவது மாதிரி ஒருவர் தலைவர் வேடம்பூண்டு நடிப்பதாலும், தான் விட்டுவிட்டேன்என்று பழையவர் சொல்வதனாலும் என்ன பயன் விளையப்போகிறது?

பணங்கொடுத்தவர் "ஐயோ! நமது பணம் நமது விருப்பத்திற்கு மாறாகவன்றோ செலவாகிறது?" என்று மனம் வருந்துகிறார். குருகுலம் இன்று இருக்கும் பெரிய இடத்துக்குப் பொருளீந்த பெருங் கொடை வள்ளலாகிய நமது அன்பர் திரு வயி.சு. ஷண்முகச்செட்டியாரவர்கள்; தாம் மறமென நினைக்கும் ஒன்றில் தமதுபொருள் கிடப்பதற்கு ஆற்றொணாத் துயரரெய்துகிறார்கள். இவ்வாறே, இன்னும் அநேகருளர். இவர்கள் போன்றாரின் பணத்தை இம்மியும் தடை சொல்லாது ஐயர் திருப்பிக் கொடுக்கா தொழிதல் பெரும்பாவமாகும். ஆ! ஹா!! கொடையாளர் மனம் நோவநடந்துகொள்ளும் செயலை என்னென்றியம்புவது? திரு வ. வெ சு. ஐயர் திருசிராபுரத்தில் கொடையாளர் கூட்டத்தார் செய்த தீர்மானத்திற்கிணங்க நடப்பாராயின் குருகுலம் திறம்பட நடக்க வழியுண்டு. குருகுலத்தின் தலைவிதி எவவாறிருக்கின்றதோ, அது இறைவனுக்கே தெரியும்.

## இடிமுழக்கம்.

### சர். பி. தியாகராஜச் செட்டியார்.

சர். பி. தியாகராஜச் செட்டியார் உடல் நீத்தாரென்ற செய்தியறிந்து வருந்துகிறோம். இவருக்கு வயது எ௩. அதிக நாளிருந்து எழுபத்து மூன்றுவது ஆண்டில், இப்பெரியார் காலஞ் சென்றபோதினும் இவர் பிரிவிற்கு எவரும் வருந்தாமலிருக்கவில்லை. காரணம் இவர் செய்த பொதுஜன ஊழியமே. அரசியலில் இவர் நம்மினும் மாறுபட்ட கொள்கை யுடையாரெனினும், இவர் நாட்டுக்குச் செய்த அருந் தொண்டைப் போற்றாதிருக்க முடியாது. இவர், இளமை தொட்டு தமது எ௩-வது ஆண்டாகிய இறுதிநாள்காறும் மக்கள் நலன் நாடியே உழைத்திருக்கிறார். இவரை நமக்கு நேரிற்றெரியாது. சீரிய ஒழுக்கம் வாய்ந்தவரெனவும், உருகிய மனமுடையவரெனவும், நறுங்குணங்கள் நிறையப்பெற்றவரெனவும், சொல்கிறார். சுயநலத்தை வெறுத்துத்தள்ளியவர்என்பதை இவர் தமக்கு அளித்த மந்திரிப் பெரும்பதவியை மறுத்த ஒன்றே வலியுறுத்தும். இவர் தமிழர் தாழ்வுபடுத்தப்படுவதைப்போக்க அரும்பாடுபட்ட பெரியாரென்பது உலகறிந்த ஒன்று. இவர் குடும்பத்தாருக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். தியாகராயர் ஆன்மா சாந்தியடைக!

### அன்பர் அருணாசலர்.

இவ்வூர் மு. அருணாசலர் என்ற அன்பர் இம்மாதம் இருபதாம் நாள் விண்ணுலகெய்தி விட்டார் என்ற செய்தியை அறிவிக்க மிக மிக வருந்துகிறோம். இவ்விளைஞருக்கு வயது பத்தொன்பதே. இச்சிறு வயதிலேயே பொதுக் காரியங்கட்கு உழைப்பதில் பெருக்கங்கொண்டு பெரிதும்முயன்று கடனாற்றிவந்த இவர்செயலையறிந்த எவரே வருந்தாமலிரார்? எதிர்காலத்தில் பயன் தரத்தக்க பலகாரியம் ஆற்றுவார் என்றுநம்பக்கூடிய ஒரு இளைஞரை இந்நாடு இழந்தது. இவர் பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்தும் இவர் குடும்பத்தாருக்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்து ஆறுதல் கூறுங்கடப்பாடுடையோம். அன்பர் ஆன்மா சாந்தியடைக!

### திரு. ராஜகோபாலாச்சாரியார்.

திரு. ச. இராஜகோபாலாச்சாரியாரும் வேறு சிலரும் தமிழ்நாட்டு அரசியற்கழகத்தின் அங்கத்தினர் பதவியை இராஜிநாமாச் செய்து விட்டனர். திரு. ராஜகோபாலாச்சாரியார் சுதேசமித்திரன் நிருபரிடம் குருகுலத்தைப் பற்றியதில் பொருள்கள் செப்பியிருக்கிறார். எல்லாவற்றையும் எடுத்துவிளக்க சந்தர்ப்பமில்லை. சமபந்தி போஜனம் செய்ய வேண்டுமென்பதே தமது கருத்தென்றும், ஆனால் இந்த விஷயம் குருகுல நிர்வாகிகள் இஷ்டத்தைப் பொறுத்தே நடைபெறவேண்டுமென்றும் ஆச்சாரியார் கூறுகிறார். இதன் நுணுக்கத்தை ஆராய வேண்டுவது அவசியமாகிறது. நிர்வாகிகள் இஷ்டப்படி நடத்த எவரும் மறுக்கவில்லை. முன்னரே அவர்கள், கொள்கை இத்தகையது, என்று கூறி யிருப்பாரானால் எம்மனையார் குருகுலத்தை எட்டிப் பார்த்திருக்க மாட்டார். ஒரு விதமாகச் சொல்லிப் பணத்தைப்பெற்றுக்கொண்டு பின்னர் மாறாகப் பேசுவதையும் செய்வதையுமே ஆட்சேபிக்கிறோம். இன்றும் அவர்கள் இஷ்டம்போல் நடத்துவதற்குத் தடையில்லை. அம்முறையின் விருப்ப மற்றோர் பொருளை, இஷ்டம்போல் நடத்துவதே முறையென்றுகூறும் நமது ஆச்சாரியார் உடனே வாங்கிக்கொடுத்து விட்டால் சண்டை இக்கணமே ஒழிந்து விடும். நமக்கு ஏற்றபடிக்கு நம் மன்பர்களிடம் பணத்தை வாங்கிக்கொண்டபிறகு தமது இஷ்டம் போல் நடத்துதலே சரி என்று கூறுவது தகாது.

### கைச்சாத்திட்டனுப்புக.

பொருள் கொடுத்த தமிழர் கூடிய திருச்சிராப்பள்ளிக் கூட்டத்தில் குருகுலத்தைச் செம்மைப்படுத்த ஐவரடங்கிய கூட்டமொன்றை நியமித்திருக்கின்றனர். அக்கூட்டத்திற்கு கானாடுகாத்தான் திருவாளர் வயி.சு. ஷண்முகச் செட்டியாரவர்கள் காரியதரிசி. இக்கூட்டத்தார் இன்னின்னரென்பதுவேறுபக்கம் பார்த்தால் தெரியும். குருகுலத்திற்குப் பணங் கொடுத்தோருள் இக்கூட்டத்தார்பால் நம்பிக்கை வைத்துள்ளோர்கள், இவர்கள் நோக்கப்படி திரு. வெ. சு. ஐயர் குருகுலத்தை நடாத்த இணங்காவிட்டால், தாங்கள் தங்கள் தொகைகளைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று, கையெழுத்திட்டு திரு. வ. வெ. சு.

ஐயருக்கு ஒரு பிரதியும் இக்கூட்டக் காரியதரிசி வயிசு. ஷண்முகச் செட்டியாருக்கு ஒரு பிரதியும் தாமதமின்றி அனுப்புமாறு வேண்டுகிறோம்.

பேதமை!

கடவுள் பிறந்திருக்கிறா ரென்றும் வேறு சிலவும் பொருளின்றி எழுதி, அதுபோல் ஒவ்வொரு வரும் பல பேருக்கு எழுத வேண்டுமென்றும் போஸ்ட் தபாற் சாவடிக்கு வீணே பலர் பணத்தைத விரைய மாக்குகின்றனர். இது பெரும் பேதமை யாகும். இக்கடிதம் எவர்க்கேனும் வந்தால் உடனே கடிதத்தைக் கிழித்தெறிந்து விட்டுப் பேசா திருப்பாராக. முன்னொரு காலத்தில் வீட்டுக் கதவுகள் தோறும் ராமம்போட்ட கதையை அன்பர்கள் மறந்திருக்க மாட்டார்கள். அநேக வீடுகளில் அந்த நாமங்கள் இன்னும் அழிக்கப்பெறாமல் இருக்கின்றன. இத்தகைய பேதமையை இனியேனும் அன்பர்கள் அகற்றுவாராக!

## உள்ளூர் செய்தி.

சென்னை உண்டியல் வட்டம் ௦—௫—௦.
இரங்கூன் உண்டியல் வட்டம் ௧—௪—௦

### சங்கரஜெயந்தி.

கல்லுக்கட்டியில் ஸ்ரீ கோபாலகிருஷ்ணன் கோவிலிலும், முத்துப்பட்டணம் கிருஷ்ணவிலாஸ மண்டபத்திலும் இவ்வாண்டும் வழக்கம் போல சங்கரஜெயந்தி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. சங்கீதக்கச்சேரிகளும், உபந்நியாஸங்களும் பல வித்துவான்களால் நிகழ்த்தப்பெற்றன. உற்சவக்கடைசிதினமாகிய சென்றஞாயிறன்று, (சித்திரைத்திங்கள் 21ம்நாள்) ஆச்சாரிய ஸ்வாமிகளின் படம் ஊர்வலமாக எடுத்துச்செல்லப்பட்டது.

திருக்குறட் கழகம்:— இரண்டு வாரங்களாகத் திருவாளர் சித. சொ. நாராயணன் செட்டியாரவர்கள் "இனியவைகூறல்" என்னும் அதிகாரத்தைப் பற்றிச் சொற்பொழிவு செய்தார்கள். அடுத்த வாரம "செய்ந் நன்றியறிதல்" என்னும் அதிகாரம் ஆராயப் படும். கழக அங்கத்தினருள் ஒருவராகிய திருவாளர் அ. தெ அ. மு. அருணாசலச் செட்டியாரவர்கள் சிற்றிளம் பருவத்தில் விண்ணுற்றது குறித்து ஆற்றொணாத் துயர் அடைவதாகவும். அநுதாபத்தை அவர்கள் பெற்றோர்களுக்குத் தெரிவிப்பதாகவும் தீர்மானிக்கப் பட்டது.

## ஊர்வம்பு.

(வம்பன் எழுதுகிறார்.)
(சென்றவாரத் தொடர்ச்சி.)

பெரும்பாலும் நம் இந்தியர்கள் இவ்வெள்ளையர்களைக் கண்டு பயப்படுவது வழக்கமா யிருப்பதால் அவர்களுக்கு அதிக தைரிய மேற்பட்டுவிடுகிறது. தம் மனம்போல் தான்றோன்றித் தனமாக நடந்து கொள்ளலா மென்று எண்ணுகிறார்கள். இந்தியர்கள்கோழைத்தன முள்ளவர்கள் என்பது அவர்களது அபிப்பிராயம். இதுவன்றி, ரயில்வண்டிகளில், வெள்ளையர் உயர்தர இந்திய உத்தியோகஸ்தர்களைப் பலதடவைகளிலும் அவமதித்திருக்கின்றார்கள். அவைகளையெல்லாம் இங்குவிளக்குவதென்றால் எனது கதை ராமாயணமாக முடியும். பத்திராதிபரும் அவ்வளவுக்கு இடங்கொடுக்க மாட்டார். அதிகமாயிருந்தால் காலையும் தலையையும் வெட்டிவிடுவார்.

இப்பொழுது சமீபத்தில் நடைபெற்ற இரண்டொரு சம்பவங்களை மட்டும் கவனிப்போம். பாடலிபுரம் ரயில்வே ஸ்டேஷனில் மைசூர் திவானை ஸ்ரீமான் ஏ. ஆர். பானர்ஜியும், பாடலிபுரம் கமிஷனரான அவரது மைத்துனர் ஸ்ரீமான் பி. வி. ஸேனரும் இருவெள்ளையர்களால் அவமதிக்கப்பட்டனர். முழு விவரங்களையும் தினசரிப் பத்திரிகைகளின் மூலமாக நீங்கள் அறிந்திருக்கலாம். ஸ்ரீமான் ஸேனரைப் பார்த்து அவ்விரு வெள்ளையர்களில் இளையவரானவர் "நீர் சீப் கமிஷனராயிருந்தால் என்ன? உமக்கு வண்டிக்குள் நுழைய உரிமை கிடையாது" என்றாராம். சிறிது நேரங் கழித்து "வண்டிபோகட்டும். உன்னை நன்றாக அடிக்கிறேன்" என்றும் தெரிவித்தாராம். ஸ்டேஷன்மாஸ்டர் சமாதானப்படுத்த முயன்றார். அவருக்கும் அதே கௌரவந்தான் கிடைத்தது. இரண்டாவது வகுப்பு வண்டியில் இடமிருக்கிற தென்று சொன்னதற்கு "துர்க்கந்தம் வீசும் இந்தியர்களுடன் அந்த வண்டியில் நாங்கள் பிரயாணம் செய்ய விரும்பவில்லை" என்று பதிலளித்தாராம். கடைசியாக வெள்ளையர் ஜபம் பலிக்கவில்லை. வயோதிக வெள்ளையர் வேறு வண்டிக்கு அழைத்துச் செல்லப்பட்டார். வண்டி புறப்பட்டதும் சிறு வயதினரான ஐரோப்பியர் பிரஸ்தாபவிருத்தர் ரயில்வே போர்டு அங்கத்தவர் ஒருவரது மருகர் என்று ஸ்டேஷன் மாஸ்டரிடம் தெரிவித்தாராம்.

இவ்விரு வெள்ளையர்களும் மேற்குறித்தவாறு நடந்துகொண்டது மிருகத்தனமல்லவா? வண்டியில் நுழைய உரிமையில்லையாம். என்? நமது தோல் கறுப்பு என்ற காரணமா? நன்றாக அடித்துவிடுவாராம். இந்தியர்களும் மனம் வைத்தால் அவ்வாறு நடந்துகொள்ளக் கூடும் என்பது அவரது சிற்றறிவுக்கு விளங்கவில்லை. இந்தியர்களிடம் துர்க்கந்தம் வீசுகிறதாம். அவர்களிடம் எத்தகைய கந்தம் வீசுகிறதோ தெரியவில்லை. அசுத்தத்தில் அவர்களைவிடக் கேவலமானவர்களும் இப்பூமியில் இருக்கின்றனரா? இந்தியர்கள் துர்க்கந்தமுள்ளவர்களெனில், இந்தியர்கள் வசிக்கும் நாடு எத்தகையதாகவிருக்கும்? துர்க்கந்தம் நிறைந்த நாட்டில் அவர்கள் வசித்தல் ஆகாது. ஆகவே அவர்கள் சீக்கிரம் துர்க்கந்தமில்லாத தங்கள்நாட்டிற்குப் போய் விடுவது நலமென்று அவர்களுக்கு யோசனைகூறுகிறேன். அங்கு சென்று பிழைப்புக்கு லாட்டரிப்போட வேண்டுவதுதான். சோற்றுக்கு வழியின்றி ௬௦௦௦ மைல் கடல் கடந்து வந்தவர்களுக்கு இவ்வளவு அகந்தையிருக்கலாமா? அவர்களது பேதமைக்கு இரங்குகிறேன். கடைசியாக அவர்கள் வேறு வண்டிசென்றது எனக்கு மெத்தசந்தோஷம். அவர்கள் இஷ்டப்படியே எந்நாளும் நடைபெறுமா? இவ்விரு உத்தமவெள்ளையர்கள் மீதும் பேகார் ஒரிஸா, மாகாண அரசாங்கத்தார் நடவடிக்கை எடுத்துக்கொள்ள உத்தேசித்திருக்கின்றனராம். இதுயாரைப்பிடித்த கல்லகாலமோ? பொறுப்பற்ற அரசாங்கத்தார் இப்பொழுதாவது இவ்விதம் தங்களது பொறுப்பையுணர்ந்ததற்கு அவர்களுக்கு எனது வந்தனம்.

கல்கத்தாவில் நடைபெற்ற இந்து மகாசபை நடவடிக்கையைக்காண சென்னைமாகாணத்தவர் ஒருவர் காசியிலிருந்து சென்றார். ரயில் வண்டியில் அவர் தூங்கிக்கொண்டிருக்கையில் ஐரோப்பியன் அவ்வறையில் நுழைந்து அவரது மூட்டைகளை அப்புறப்படுத்தி அவருக்குப் பலவிதத்திலும் இன்னல்கள் விளைத்தான். அவனது வேலைக்காரப்பையன் நம் இந்தியகனவானது வேலைக்காரப்பையனை எட்டித்தள்ளினான். தன்எஜமானனை அவன் எழுப்பினான். அவர்களிடம் இரண்டொருவார்த்தைகள் பேசுவதற்குள் அவர்கள் இந்து கனவானைக் கழுத்தைப் பிடித்துத்தள்ளி உதைக்கமுற்பட்டனர். உடனே இந்திய கனவான், நிலைமைகேவலமாகிவிடுமென்று எண்ணி, தான் நல்லபலிஷ்டானபடியால், அவ்விருவரையும்கீழே வீழ்த்தினார். உடனே அவ்வைரோப்பியனுக்கும் அவரது வேலைக்காரனை பிரஞ்சுகாரனுக்கும் நற்புத்தி வந்துவிட்டது. பின்னர் நம் இந்தியருடன் நண்பர்களாகி விட்டனர். இந்திய கனவான் வாய்மூடி மௌனியாக விருந்திருப்பின் நன்றாக உதைத்திருப்பார்கள். எட்டினால் வெள்ளையர்கள் தலையைப் பிடிப்பார்கள், இல்லாவிட்டால் காலைப் பிடிப்பார்கள். இதுதான் அவர்களது இயற்கைக்குணம். இவ்வாறு அவர்களுக்கு நற்புத்தி கற்பித்த ஸ்ரீமான ராஜா நரசிங்காரவை அவர்களும்சரி, நாமும்சரி மறக்கமுடியாது. நேயர்களே எனது கதை வெகு அதிகமாகி விட்டபடியால் இத்துடன் நிறுத்திக்கொள்ளுகிறேன். என்னைக்கோபியாதீர்கள்! எவ்வளவோ சுருக்கமாக விருக்க முயன்றும்என்னையறியாமலே வெகு நீளமாக நீண்டுவிட்டது. மன்னியுங்கள். வந்தேமாதரம்.

## தந்திச் செய்தி,

பினங்கு சித்திரைமீ உ௰௨

| | |
|---|---|
| சென்னை உண்டியல்விலை | நூற்று ஐம்பத்தேழு. |
| ஈயம்விலை | நூற்று இருபது. |
| ரப்பர் விலை | நூற்று இரண்டு. |



## மதிப்புரை.

### தேசஊழியன்.

இப்பெயரியபத்திரிகையொன்று நமது பார்வைக்கு வரப்பெற்றோம். இது வாரம் ஒரு முறை வெளிவருமெனவும் இதன் ஆசிரியர் திரு ஆ. சு. நாகரெத்தினம். என்றும் இதிற் பொறிக்கப்பெற்றுள. இது புதுக்கோட்டையினின்றும் வருகின்றது. இதன் முதலிதழ்த் தலையங்கத்தில், இப்பத்திரிகை, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆதியவற்றை நோக்கமாகக் கொண்டு ஆரம்பிக்கப் படுவதாகக் கூறப்பட்டிருக்கிறது. அவ்வாறு நடைபெறுமானால் நல்லதே. குருகுல விஷயத்தில் இப்பத்திரிகை திரு வ. வெ. சு. ஐயரைப்பெரிதும் ஆதரித்து இதன் முதல் இதழிலேயே எழுதியிருக்கிறது என்பதை அறிவிக்க வேண்டுவது நமது கடமை. மேலும் இப்பத்திரிகை "குருகுலக் கிளர்ச்சியில் ஈடுபட்ட தனவைசியப் பிரபுக்கள் பஞ்சமச் சமையற்காரன் சமைப்பதைச் சாப்பிடத் தயாராக விருக்கின்றனரா?" என்று கேட்கின்றது. ஆமென்றால் குருகுலத்தில் பஞ்சமச் சமையற்காரனுக்கு ஏற்பாடு செய்யப்படுமோ என்பது தெரியவில்லை. விரிப்பிற் பெருகும். இப்பத்திரிகை வேண்டுவோர் ஆசிரியருக்கு எழுதிப்பெறுக. ஆண்டுக் கட்டணம் உள்நாட்டிற்கு ரூ ௪. வெளிநாட்டுக்கு ரூ.

### ஆனந்த போதினி பஞ்சாங்கம்.

குரோதன வருஷத்திய சர்வ முகூர்த்த "ஆனந்தபோதினி" சுத்த திருக்கணித பஞ்சாங்கத்தின் பிரதி யொன்று வரப்பெற்றோம். இதனை ஆக்கியோன் பி. ஏ. பட்டம் வகித்தவரும் திருக்சித்த ஆரிய-சூரிய சித்தாந்த வாக்கியக் கணிதப் பயிற்சியுள்ளவருமான ஸ்ரீமான் வி ஜி. ராஜன் அவர்களாகும். இதில் தேசாந்திர ஸம்ஸ்காரம் அச்சிடப்பட்டிருப்பதால் எல்லாவிடங்களுக்கும் எளிதில் உபயோகித்துக்கொள்ளலாம். விலை அணா உ. வேண்டுவோர் சென்னை ஆனந்தபோதினி ஆபீஸிற்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

### குருபூஜை திருநட்சத்திரங்கள்.

அறுபத்துமூன்று நாயன்மாராதிய திருத்தொண்டர் குரோதன வருஷத்துக்குருபூஜைத் திருநக்ஷத்திரங்கள் அடங்கிய வெளியீடு ஒன்று நமது பார்வைக்கு வந்துள்ளது. இதில் திருத்தொண்டர் திருநாமம், திருநட்சத்திரம், திருத்தொண்டத்தொகை, புராணச் செய்யுட்கள், மாதம், தேதி, வாரம் முதலியன அடங்கியுள்ளன. தேவைப்படுவோர் வெளிமுத்தி வயிரவ ஐயா அவர்கள் பௌத்திரர் தேவகோட்டை ஸ்ரீமான் மு. சோமசுந்தரம் செட்டியாரவர்களுக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

### இராஜிநாமா.

ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார், எம். கே. ஆச்சாரியார், டாக்டர் ராஜன், டாக்டர் சாஸ்திரி முதலியவர்கள் தாங்கள் மகாண தேசிய சபையில் வகித்து வந்த ஸ்தானங்களை ராஜனாமாச் செய்திருக்கின்றனர்.

## இனிய தமிழ்நாவல்கள்.

யாப்பரமானந்தன் ரூ. க—0—0
யாணபுரத்துவீரன் ரூ. க—0—0
கம்பராமாயணம் செய்யுள்
உயர்ந்த பதிப்பு.
முதற்பாகம் ரூ. ச—0—0
இரண்டாம் பாகம் ரூ. ச—0—0
தமிழ் இங்கிலீஷ் அச்சுக் காப்பி
புத்தகங்களும் கிடைக்கும்.

பாரதியார் நூல்கள்.
க-வது பாகம் ஸ்வதேச
கீதம் க—0—0
உ-வது பாகம் க—0—0
௩-கண்ணன் குயில்பாட்டு
பாரதி அறுபத்தாறு 0—௧0—0
ச-ஞானரதம் (இனிய
அரியநாவல்) 0—அ—0
ரு-பாஞ்சாலி சபதம் 0—௧உ—0
௬-பகவத்கீதை மூலமும்
உரையும்முகவுரையுடன் க—0—0

## இனிய தமிழ்நாவல்கள்.

நாவல் உலகத்தாரால்தலை சிறந்த ஆசிரியரெனக் கருதப்படும் வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார் பி. ஏ. எழுதியவை. வாசிக்க வாசிக்கமிகவும் இன்பத்தைத் தரக்கூடியவை. ஒருமுறை வாசித்துப் பார்ப்பவர்கட்கு இதின் தன்மை புலப்படும்.

விலாஸவதி (க-உ) ௩—0—0
மதனகல்யாணி (க,உ,௩) ச—அ—0
பூர்ணசந்திரோதயம்-
(க,உ,௩,ச) எ—அ—0
சௌந்தரகோகிலம் க—அ—0
மேனகா (க,உ) ௩—0—0
கும்பகோணம் வக்கீல்
(க,உ) ௩—0—0
பாலாமணி (க,உ) உ—அ—0
வஸந்தமல்லிகா க—அ—0
வித்தியாசாகரர் க—ச—0
திலோத்தமா 0—௧உ—0
மாணிக்கவர்சகர் 0—அ—0

காரியஸ்தர்,
வள்ளுவர் நிலையம்.
காரைக்குடி.

## தபால் தந்தி மித்திரன்.

மூன்றும் பதிப்பு வெளியாகிவிட்டது.
முந்திய பதிப்புக்களைக் காட்டிலும் இதில் இருபது பக்கங்கள்வரை அதிகமாகச் சேர்த்திருக்கிறது. எளிதிற்றெரிந்துகொள்ளக்கூடிய எத்தனையோ அருமையான விஷயங்களெல்லாம் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. வர்த்தகர்களுக்கும் ஏனையோர்களுக்கும் இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. உடனே எழுதுங்கள் வி. பி. மூலமும் அனுப்பப்பெறும்.

புத்தகம் க-க்கு விலை ரூ. உ.
தபாற்செலவு பிரத்தியேகம்.
மானேஜர். அழகேசன் அரிசி ஆலை
மணியுவா அப்பர் பர்மா.















### தனவைசிய ஊழியன் சந்தா விபரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உள்நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. | [illegible] | [illegible] | 0 |
| வெளிநாட்டிற்கு ஷை | | ௩ | 0 | 0 |
| தனிப்பிரதி க-க்கு | | 0 | உ | 0 |

### விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| மாதம் க-க்கு பத்தி க-க்கு | ரு உ0 | ஒருபக்கம் விளம்பரம் செய்ய | |
| ஷை பத்தி அரைக்கு | ரு ௧௧ | ஒரு மாதத்திற்கு | ரு [illegible] |
| ஷை கால்பத்திக்கு | ரு ௬ | ஷை ஒரு வாரத்திற்கு | ரு [illegible] |
| ஷை அங்குலம்க-க்கு | ரு உ | | |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. ௧எ- ஆகவும், அரைப்பத்திக்கு ரூ. ௬-ஆகவும், கால்பத்திக்கு ரூ. ௫-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதிற்கதிகமாகவும் விளம்பரம் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. ௧௫-வீதமும், அரைப்பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

காரியஸ்தர், "தனவைசிய ஊழியன்" காரைக்குடி.

சொக்கலிங்கனால் காரைக்குடி தனவைசியஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரஞ்செய்யப்பெற்றது.

